[31st August 1961

(2) MESSAGE FROM THE ASSEMBLY

MR. CHAIRMAN : I have also received a message from the Deputy Speaker, Legislative Assembly transmitting a copy of the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961) as passed by the Assembly for the recommendation of the Council and certifying that the Bill is a Money Bill within the meaning of Article 199 of the Constitution of India.

## III.—GOVERNMENT BILL.

### (1) THE MADRAS APPROPRIATION (NO. 5) BILL, 1961 (L.A. BILL NO. 6 OF 1961)

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Chairman, Sir, I move—

'That the Madras Appropriation (No. 5) Bill [a], 1961 (L.A. Bill No. 36 of 1961) as passed by the Assembly, be taken into consideration'.

MR. CHAIRMAN : The question is—

'That the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961) as passed by the Assembly, be taken into consideration'.

The motion was put and carried and the Bill was taken into consideration.

Clause 2 was put and carried.

The Schedule was put and carried.

Clause 1 and the Preamble were put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Chairman, Sir, I move—

'That the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961), as passed by the Assembly, be passed'.

MR. CHAIRMAN : The question is—

'That the Madras Appropriation (No. 5) Bill, 1961 (L.A. Bill No. 36 of 1961), as passed by the Assembly, be passed'.

The motion was put and carried and the Bill was passed.

## IV.—NON-OFFICIAL BUSINESS.

### RESOLUTIONS.

3-20 p.m. MR. CHAIRMAN : The next item on the agenda is Non-official business—Resolutions. The first Resolution is in the name of Sri K. M. Ramasamy Gounder. As he is not in his seat, his Resolution is deemed withdrawn. I now pass on to the next Resolution in the name of Sri C. Ethirajalu.

---

[a] Printed as Appendix II on pages 392–393 infra.

31st August 1961]

## (1) PROVINCIALISATION OF MINISTERIAL SERVICES IN THE MUNICIPALITIES

SRI M. ETHIRAJALU : Sir, I move—

' This Council recommends to the Government that the Ministerial Services in the Municipalities be provincialised '.

VIDWAN T. MUTHUKANNAPPAN : I second the resolution. Sir.

MR. CHAIRMAN : Resolution moved—

' This Council recommends to the Government that the Ministerial Services in the Municipalities be provincialised'.

SRI M. ETHIRAJALU : தலைவர் அவர்களே, இந்தத் தீர்மானத்தை நான் இந்த சபை முன் கொண்டுவருகிறேன். இந்தத் தீர்மானமானது, தமிழ் நாடு உள் துறை (முனிஸிபல்) நிர்வாகத்திலிருக்கக்கூடிய ஊழியர்களுடைய சேவைகளையும் தமிழ் நாட்டு அரசாங்கத்தின்கீழ் கொண்டுவர வேண்டுமென்பது தான் இதனுடைய முக்கிய நோக்கம். ஏன் இதைச் சொல்லு கிறேன் என்றால், தமிழ் நாட்டு அரசாங்கம் நிர்வாகம் செய்து வருகின்ற நேரத்தில் தமிழ் நாட்டிற்குள்ளே இருக்கின்ற ஸ்தல ஸ்தாபனங்கள் நடத்துகின்ற ஆட்சியானது மிகவும் மோசமான நிலையில் நாளுக்கு நாள் போய்க்கொண்டிருக்கிறது என்பது எல்லோருக்கும் நான் சொல்லாமலே விளங்கும். ஏறக்குறைய நமது நாட்டில் சுமார் 64 நகர சபைகளும், 64 விதமாக ஆட்சியை நடத்துகின்றன என்பதுபற்றிச் சொல்லத் தேவையில்லை. அதிலே, முதல் தர நகரசபை 13-க்குமேல் இருக்கின்றன. மற்றவைகளெல்லாம் மூன்றும்தர நகர சபைகள். அத்துடன் ஸ்பெஷல் கிரேடாக கோவை, மதுரை போன்ற இடங்களில் இயங்கி வருகின்றன. இந்த நகர சபையிலுள்ள ஊழியர்களுடைய சேவையை, வேலைகளை எல்லாம் சர்க்காருக்குக் கீழ் கொண்டு வந்தால்தான், இந்த நகரசபைகளிலிருக்கக்கூடிய நிர்வாகம் நன்றாக நடைபெறுமென்று நான் நினைக்கிறேன். ஏனென்றால் அவர்கள் நினைத்துக்கொண்டிருப்பது போல், சர்க்காருக்கும் நமக்கும் எந்தவிதத் தொடர்புமில்லை. அதன் காரணமாக அவர்கள் செய்கின்ற வேலையை அறவே மறந்து அரசியல் கட்சிகளோடு சேர்ந்து பல எதிர்ப்பு சக்திகளை நிர்வாகத்தில் உண்டாக்கி, இதை ஒரு பெரிய சிக்கலாக்கி ஒவ்வொரு நகரசபையும் இயங்கி வருகிறதென்றால், அது நகரசபை ஊழிர்களாலென்று தான் அர்த்தம். நகரசபை அங்கத்தினர்களை மக்கள் தேர்ந்தெடுத்தது. அதன்மூலம் நகரசபை ஆட்சி நடத்துகிறது. ஆனால், பரம்பரை, பரம்பரையாக, அதாவது தாங்கள் retire ஆகும் காலம் வரை ஒரே இடத்தில் இருந்துகொண்டிருப்பது போன்றவற்றைச் செய்கின்ற நகர சபை ஊழியர்களைப் பற்றித் தான் இப்பொழுது பிரச்னை. அவர்கள் அந்த விதமாக செயல் படுகின்ற கட்சி ஆட்சிக்கு, எந்தக்கட்சி நிர்வாகத்தை நடத்து கின்றதோ, அந்தப்பக்கம் பாதிப்பேர் சேர்ந்துவிடுகிறார்கள்.

[Sri M. Ethirajalu] [31st August 1961

ஆட்சி நடத்தாமல் இருக்கின்ற பக்கம் பாதிப்பேர் சேர்ந்து விடுகிறார்கள். இப்படி இருக்கும் காரணத்தால், இவர்கள் செய்கின்ற தவறுகளும், அத்து மீறிய செய்கைகளும், நகரசபை அங்கத்தினர்க்குள்ளேயே எப்பொழுதும் சண்டை சச்சரவுகளும் அடி தடிகளும், நகரசபை நிர்வாகம் நடத்த போலீஸ் பாதுகாப்பு கேட்கும் நிலையை ஏற்படுத்துகிறதென்றால், இவர்கள்தான் இதற்கு காரணமென்று நான் சொல்லாமலிருக்க முடியவில்லை. அது மட்டுமல்ல, நகரசபை ஊழியர்கள் செய்கின்ற குற்றங்களுக்கு நேரிடை நடவடிக்கைகள் கூட எடுக்க முடியவில்லை. அப்படி எடுக்கவேண்டுமென்றால் அங்கிருக்கும் அதிகாரிகளைக்கேட்டுத்தான் அவர்கள் மீது நடவடிக்கை எடுக்கவேண்டும். இப்பொழுது பல்வேறு கஷ்டமிருக்கிறது. இன்றைக்கு, அந்த நகரத்திலிருக்கும் பொது மக்களுக்கு ஏதேனும் தீங்கு ஏற்பட்டுவிடுமோ என்று சர்க்காருக்கு பயமாக இருக்கிறது. அது நாளுக்கு நாள் அதிகரித்து வந்துமிருக்கிறது. நகரசபை அங்கத்தினர்களைத் தேர்தலுக்குக்கூட உபயோகிக்க வேண்டிய அவசியமில்லை. பரம்பரையாக வியாபாரம் செய்கின்ற ஏகபோக பாத்தியத்தை போன்று, மக்கள் தேர்தல் காலத்தில் பகிரங்கமாக தேர்தலிலீடு பட்டு காரியம் செய்கிறார்கள். அப்படி ஒரு நிர்வாகத்தை நாம் அனுமதித்துக்கொண்டே போனால் அது ஜனநாயக அமைப்புக்கே விரோதமானது என்று சொல்லவேண்டும். ஜனநாயக அமைப்பில் இந்த நாடு பூராவையும் இன்றைக்கு சர்க்கார் ஆட்சி செய்து கொண்டு வருகிறது. அதன் மத்தியில் இந்த நகரசபைகள் தனியாக எங்களுக்கும் சர்க்காருக்கும் ஒன்றுமில்லை என்ற பாணியில் இயங்குகிறது என்பதை சர்க்கார் இது வரை அறிந்திருக்கிறது. 1920-ம் வருஷத்தில் ஏற்பட்ட **District Municipalities Act** ஐ, எப்படி நாம் ஏற்கெனவே கூட்டுறவுச் சங்க சட்டத்தை திருத்தி அமைத்தோமோ, அதே மாதிரி இதையும் திருத்தி அமைக்காவிட்டால் பல்வேறு கஷ்டங்கள் வந்துகொண்டே தானிருக்கும். எங்காவது ஒரு நகரசபை, நன்றாக, நியாயமாக பொதுமக்களுக்கு சௌகரியமாக இயங்குகிறதென்றவொரு நம்பிக்கை எந்த நகரசபையிலும் ஏற்படவில்லை. இனி ஏற்படப் போவதுமில்லை. இன்றைக்கு எதிர்க்கட்சியினால் சலுகை இல்லையென்றால், உடனே அவர்கள் எதிர்க்கட்சியிலிருப்பவர்களை மாற்ற வேண்டுமென்று தீர்மானம் கொண்டுவருகிறார்கள். அங்கு இருக்கும் கமிஷனர், ஹெல்த் ஆபீஸர், **Engineering Department** -ல் இருக்கும் **Engineer** போன்ற பல்வேறு ஆபீஸர்களைதான் மாநில ரீதியில் அரசாங்கம் மாற்றுகிறது. மற்றவர்களையல்ல. மாற்றவும் முடியாது. ஆனால் அரசாங்கம் அப்படி மாற்ற வேண்டுமென்று, பொது மக்களால் கொடுக்கப்படும் கோரிக்கையை வைத்துத்தான் செய்ய முடியுமே தவிர நேரிடையாக ஒன்றும் செய்ய முடியாது. அவர்கள் கேட்கவேண்டும். அதன் பிறகு சர்க்கார் இஷ்டப்பட்டுச் செய்யலாம். இன்றைக்கு
3-30 p.m. நகரசபை ஊழியரில் எவரேனும் ஒரு தவறு செய்தால் அதற்கென ஒரு **resolution** கொண்டுவந்து மாற்றவேண்டுமென ஒரு தீர்மானம் உடனடியாக சர்க்காருக்கு வந்து விடுகிறது. வந்த

வுடன் எதிர்க்கட்சியிலிருப்பவர்கள் 10 பேரைப் பிடித்து உடனே மாற்றக்கூடாதெனச் சொல்லுகிறார்கள். இப்படி இரண்டு பக்கமும் தீர்மானம். இதனுல் ஒன்றும் இன்றையதினம் செய்ய முடியாமலிருக்கிறது. எங்கேயும் நல்ல நிலையில் இந்த நகர சபைகள் நடக்கப்போவதில்லை. ஆனுல் அதை முன்னிட்டு நான் சொல்லவில்லை. இன்றைக்கு சர்க்கார் கட்சிக்கு அவர்கள் வந்து விட்டால், அவர்களுக்குக் கிடைக்கக்கூடிய சலுகை, வசதிகள் கிடைக்குமாறு அவர்கள் சார்பில் சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன். சிலருக்கு நல்ல அதிகாரம் அதிகமாக இருக்கக்கூடிய நகர சபையில், இந்த உத்தியோகஸ்தர்கள் தெருத் தெருவாகச் சென்று ஓட்டு கேட்கிறார்கள். இம்மாதிரி நிலையில் தான் நகர சபைகள் இயங்குகின்றன. ஆகவே, நகரசபை ஊழியர்கள் சேவையை எப்படியாவது மாநில அரசாங்கத்திற்குக் கீழ் கொண்டு வரவேண்டும். அப்படிச் செய்கையில் பல பிரச்னைகள் எழலாம். மாநில ரீதியாக மாற்றுவதா அல்லது ஜில்லா ரீதியாகவா என்று. இப்பொழுது நமது மாநிலத்தில் முதல்தர நிர்வாக சபைகள் பதினைந்து இருக்கின்றன. இரண்டாம் தர நகரசபை 13 இருக்கிறது. மூன்றும் தரம் மற்றவைகள். இப்போது முதல்தர நகரசபையில் அவர்கள் எண்ணத்திற்குத தகுந்தவாறு நடக்காமல் தவறு செய்தால், 3 வருஷத்திற்கு ஒரு முறை மாற்றவேண்டுமானுல், முதல் தரத்துக்கு மாற்றலாம். இரண்டாம் தரத்தில் கஷ்டம் ஏற்பட்டால், 2-ம் தரத்திற்கு மாற்றலாம். அப்படியே மூன்றும் தரமும். நகரசபைக்கு நகர சபை மாற்றுவதற்கு இடமில்லை. ஜில்லா அளவில் இரண்டாம் தரம், மூன்றும் தரம் நகரசபைக்குக் கீழ் இருக்கிற லோயர் டிவிஷன் கிளார்க்குகளை மாற்றுவதற்கு ஜில்லாவுக்குள்ளேயே மாற்றலாம். இப்படி மாற்றினுல்தான் நமக்கு நல்ல ஒரு ஆட்சியை ஏற்படுத்தி நடத்த முடியுமென்று நான் சொல்லிக்கொள்ளுகிறேன். இதிலே அவர்களுக்கு எந்தவிதமான சங்கடமும் இருக்க நேரிடாது. சர்க்காருக்குக் கூட நேரடியாக எந்தவித அதிகாரமும் நகரசபை ஆக்டில் இல்லை. அவர்களைக் கேட்டுச் செய்யவேண்டுமென்று இருப்பதால், நம் மாகாண அரசின் கீழே இதைக் கொண்டுவரவேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். சென்ற மாதத்திலோ அல்லது இந்த மாதத்திலோ என்று நினைக்கிறேன், சிதம்பரத்தில் நடந்த தமிழ்நாடு நகரசபைத் தலைவர்கள் கூட்டத்தில் கூட ஒரு தீர்மானம் நிறைவேற்றி நகரசபை ஊழியர்களை அர்சாங்கத்தின் கீழ் கொண்டுவரவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்தத் தீர்மானம் சர்க்காருக்கு வந்திருக்கிறதா என்றுகூட எனக்குத் தெரியாது. பத்திரிகையில் பார்த்தேன். அதன்படி அவர்களே அதை ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே அவர்களை எப்படியும் நாம் மாற்றியாக வேண்டும். அதோடு நகரசபையில் இருக்கக்கூடியவர்கள் தேர்தல் நேரங்களில் பொதுமக்களுக்கு எதிராகவும் வேலை செய்கிறார்கள் என்று நினைத்தால், அதாவது பொதுமக்கள் எழுதுவதற்கு சந்தர்ப்பம் ஏற்பட்டால், அவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறேன். இப்போது இந்தக்

கார்ப்பரேஷன் கூட இன்றைக்குத் தேர்தலில் நேரிடையாக ஈடுபட்டிருக்கிறார்கள். தலையிட்டு வேலை செய்திருக்கிறார்கள். இப்போது கூட என்னிடம் அதற்கான ஆதாரம் நிறைய இருக்கிறது. அவர்கள் பகிரங்கமாகச் சொல்கிறார்கள். சிலர், நாங்கள் தேர்தலுக்கு ஓட்டு சேகரிக்கவும் செய்வோம் என்றுகூடச் சொல்கிறார்கள். இந்த நிலையைப் போக்குவதற்கு மட்டும் நான் இந்தத் தீர்மானத்தைக் கொண்டு வந்தேன் என்று நினைக்கவேண்டாம். இது மிகவும் முக்கியமானது. தேர்தல் மூலமாகச் சென்று அங்கு நகரசபை நடத்துகிறவர்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்று கேள்வி எழலாம். மற்றவைகளை அட்மினிஸ்ட்ரேஷன் முதலியவைகளை அவர்களே வைத்துக்கொள்ளட்டும். ஆனால் நாம் சர்க்கார் சிப்பந்திகள், சர்க்காருக்குக் கீழ் நாம் இருக்கிறோம்; சர்க்கார் என்ன ஆக்கினை இடுகிறார்களோ அதன்படி நான் நடக்க வேண்டுமென்ற பொறுப்புணர்ச்சி வந்தாக வேண்டும். அவர்களுக்கு. அந்தப் பொறுப்புணர்ச்சி நகரசபை சிப்பந்திகளுக்குக் கிடையவே கிடையாது. எங்கோ பணத்தை வசூலிக்கிறார்கள். அவர்கள் பணத்தில் நாம் சம்பளம் வாங்குகிறோம். ஆகவே சர்க்காருக்கு பயப்படவேண்டிய அவசியமில்லை என்று அவர்கள் கருதுகிறார்கள். தமிழ்நாடு பூராவும் எடுத்துக்கொண்டால், அவர்களுடைய சம்பளம், அவர்களுக்குக் கொடுக்கவேண்டிய சலுகைகள், மற்றவையெல்லாம் நாமே எடுத்துக்கொள்ளும்படி வரலாம் என்று சர்க்கார் நினைக்கலாம். சம்பளக் கமிஷன்படி நாம் எந்த அதிகாரிகளுக்கு ஊதியம் குறைவாக இருக்கிறதோ அதை ரிபோர்ட்படி கொடுக்கவேண்டுமென்று ஒப்புக்கொள்ளுகிறோம். அவர்களுக்குக் கிராண்ட் கொடுக்கிறோம். இன்னும் எவ்வளவோ செய்கிறோம். அப்போது ஏன் ஊழியர்களை நாம் எடுத்துக்கொள்ளக்கூடாது? அப்போதுதான் நல்ல நிர்வாகம் நம் தமிழ்நாட்டில் பார்க்கமுடியும். இல்லாவிட்டால் சண்டை, சச்சரவு நகரசபை நடக்கும்போது போலிஸ் பாதுகாப்பு இவை எல்லாம் அவர்களால் ஏற்படத்தான் செய்யும். பகிரங்கமாகக் குற்றம் சுமத்துகிறேன் என்று நினைக்கவேண்டாம். சர்க்காருக்கு வந்திருக்கிற ரிபோர்ட்டிலிருந்து எடுத்துப் பார்த்தால், நிச்சயமாக அவர்களுடைய சர்வீஸ் அத்தனையும் இந்தத் தொல்லைகளையும் நீக்குவதற்கு, நல்ல நிர்வாகத்தை ஏற்படுத்துவதற்கு நகரங்களில் இருப்பவர்கள் சர்க்காரைக் குறை கூறுகிறார்கள். அவர்களைப்பற்றிக் குறை கூறுவது கிடையாது. ஒருவர்மீது தீர்மானம் போட்டு மாற்றவேண்டுமென்றால், ஊழியர்கள் வீடு வீடாகச் சென்று 'கான்வாஸ்' செய்கிறார்கள். குறிப்பாகச் சொல்ல வேண்டுமென்றால், ஒரு கிளார்க்கு கூட்டத்தைக் கூட்டி அடித்திருக்கிறார்கள் ஒருவரை. யாருடைய தயவில், யாருடைய தைரியத்தில் அடித்திருக்கிறார்கள் என்று சொல்ல முடியாது. கடலூரில் இந்தச் சம்பவம் நடந்தது. அந்தக் கமிஷனர் எங்கள் முன்னிலையில் கண்ணீர் விட்டுவிட்டு மாற்றல் வாங்கிக்கொண்டு போய்விட்டார். இதையெல்லாம் சொன்னால், அந்தக் கமிஷனருக்குக்கூட நன்றாக இருக்காது. இருந்தாலும் சொல்லவேண்டியிருக்கிறது. இதையெல்லாம் நீக்குவதற்கு இதுபோன்ற

31st August 1961] [Sri M. Ethirajalu]

செய்கைகளை அடியோடு தீர்த்துக்கட்டுவதற்கு நகரசபை ஊழியர்களை நமது மாநில அரசாங்க ஊழியர்களாக மாற்ற வேண்டும். அதனால் எவ்வளவு செலவானாலும் அதைப்பற்றிக் கவலை இல்லை என்ற நோக்கத்துடன் இப்போது எடுத்துக்கொள்ள வேண்டும். இல்லாவிட்டாலும்கூட இந்த உண்மையான, நேர்மையான கோரிக்கையை நிறைவேற்றியாக வேண்டுமென்று மக்கள் கூறத்தான் செய்வார்கள். தமிழ் நாட்டிலுள்ள நகர சபைத் தலைவர்கள் இந்தத் தீர்மானத்தை இப்போது சர்க்காருக்கு அனுப்பியிருப்பதாகப் பத்திரிகையில் பார்த்தேன். அப்படியிருக்க இதை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொண்டு நான் என்னுடைய தீர்மானத்தை நிறைவேற்றும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

Sri T. P. SRINIVASAVARADAN : Sir, we have just now heard the hon. Member Sri M. Ethirajalu pleading for the provincialisation of the municipal services. He made two points. One is that the clerks took an active part in politics and that during elections they aligned themselves with some party or other. The second point is that there is no feeling among the employees that they belong to the State or that they are the State employees but that they are the employees of the municipality. I should like to place before this House and also before Sri M. Ethirajalu other factors also for consideration. Very recently I think the District Boards were abolished, and we have transferred most of the powers to the panchayats. Whether it is for good or for bad, we do not know, but anyhow the cry has been all along that the people should exercise democratic powers and that, therefore, we should vest the panchayats with more powers. If we are going to take away the powers from the municipalities now, I think it is against the principles which we have adopted. The first thing the hon. Member says is that the employees should be provincialised. I do not know whether he seriously means that clerks and even peons should be provincialised. If this takes place, let us imagine for a moment what will happen. I know in the case of teachers in District Board Schools there is a lot of indiscipline. They defy sometimes the headmasters. Somehow they get themselves transferred to some other place. This will exactly happen if we provincialise the municipal clerks. They will not obey the Commissioner. They will not obey the Chairman. Then there is no need for any municipal Council at all. We have given the Commissioner a number of employees directly under the State Government.

(Deputy Chairman in the Chair.)

Further, it will become unwieldy for the State to control the clerks in all the municipalities, which run into many thousands. Will it be possible to have effective control over these clerks? Every day we will be getting petitions and applications for transfer. That will be the result. I do not know whether the hon. 3-40 p.m

Member Sri M. Ethirajalu has realised the difficulties in the matter. If a peon, having a house in the municipal area, is transferred to another municipality, he will find difficulty in getting accommodation. Even officers find it extremely difficult to get accommodation on their transfer to other places. If we should transfer a peon or a clerk, who is getting a poor salary, to some other municipality, imagine the difficulties he will be put to in finding accommodation for himself. Of course officers in the top levels must be transferred once in three years or five years. But at the lower levels, only when there is some stability and the men are not transferred, they can do some work. If only they are kept in a particular place for a number of years, they can do some real work. But if we transfer them from place to place every two years or three years, there will be no interest in them. The person will only be marking time. He will be looking forward to transfer. This will result in inefficiency. Inefficiency will result if we provincialise the clerical cadre in the municipal services.

Another thing which I should like to bring before this House is this. As I said, if we accept what Sri Ethirajalu says, then there is no need for any municipal council at all. We have been saying all along that it is these municipal councils that give training to budding politicians, legislators, and so on. If the municipality is to be abolished, and it does not exercise any power, then where is the chance to have a second line of politicians or legislators? Considering all these things, I think the provincialisation of the municipal services is not a good thing so far as the clerks and peons are concerned. We can have provincialisation in the case of officers, for example, the Commissioners, Revenue Officers, Health Officers, and so on. If we provincialise the clerks, then we will have to provincialise the teachers also. They are also the servants of the municipality, and then they will be transferred from one municipality to another. Even now the teachers are transferred within the municipality from one school to another. Take, for instance, the transfer of a teacher from the Washermanpet Corporation School to Adyar. This teacher finds it extremely difficult to get accommodation in Adyar. If the teacher who gets a poor salary should be transferred from one municipality to another he will find it extremely difficult to get accommodation in the latter place. And if we are going to transfer teachers frequently, I think woe unto education. That will be the result. I cannot support this Resolution, because it is a sweeping one which wants the provincialisation of all cadres of service in the municipalities.

* **Sri A. K. THANGAVELU MUDALIAR :** தலைவர் அவர்களே, நகரசபை, கவுன்சிலுக்குச் சில அதிகாரங்கள் இருக்கின்றன; கமிஷனருக்குச் சில அதிகாரங்கள் இருக்கின்றன. இப்படி இரண்டுவிதமாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அதில் 'அப்பாயிண்ட்மெண்ட் கமிட்டி' என்று போட்டிருக்கிறார்கள். அதில் கவுன்சிலர்கள் பார்த்துத்தான் வேலை ஆட்களைத் தேர்ந்தெடுக்

31st August 1961] [Sri A. K. Thangavelu Mudaliar]

கிறார்கள். ஐயா சொன்னமாதிரி இல்லை. ஆட்களுக்கு வேலை கொடுக்கிறார்கள் அவர்கள். வேலை கொடுத்தவனுக்கு நன்றிக்காக உதவி செய்யக்கூடாதா? இது எங்கும் இருக்கிறது. மனித சுபாவம் அது. அதனால் அவர்களை மாற்றுவது என்று சொன்னால், அவர்களேதான் தங்களை மாற்ற சம்மதிக்கிறார்களே. அதிகமாக நகரசபையில் பிரமோஷனுக்கு வசதி இல்லை. ஆகையால், 'நாங்களே போகிறோம் பஞ்சாயத்து யூனியன் வேலைகளுக்கு எங்களை எடுத்துக் கொள்ளுங்கள்' என்று கேட்கிறார்கள். அவர்கள் முனிசிபாலிடியிலேயே இருந்து வேலை செய்ய சம்மதிக்கவில்லையே. இந்திய அரசாங்கத்தில் ஆட்களை எடுத்துக்கொள்வதாக வந்த போது இதிலிருந்த நல்ல ஆட்கள் எல்லாம் அங்கு போய் விட்டார்கள். இப்போது எல்லாம் கத்துக்குட்டிகள்தான் இருக்கின்றன. ஆகையால் சம்பளத்திற்கு ஆள் வேண்டுமென்று தேர்ந்தெடுப்பதற்கும் அவர்களைக் காப்பாற்றுவதற்கும் கவுன்சிலுக்கு அதிகாரம் இருக்கிறது. ஒரு பார்ட்டி கவுன்சிலில் இருந்தால், அதில் என்ன நஷ்டம்? அவர்களுக்கும் பாத்தியம் உண்டு. பிரிட்டிஷ் கவர்ன்மெண்ட் வெளியே போகவேண்டுமென்று இந்த செக்ரடேரியட் கிளார்க்குகள் வேலை செய்யவில்லையா? அது இயற்கைதான். மேற்கண்ட வேலைக்குப் போவதற்கு அவர்கள் தயாராக இருக்கும்போது, 'அதை செய்துவிட்டான், இதை செய்துவிட்டான்' என்று சொன்னால் பின்னால் வருகிறவர்களும் அப்படித்தான் செய்வார்கள். ஆட்களை நடத்தும் விதத்தில் எல்லாம் இருக்கிறது. சர்க்கார் அவர்களுக்கு உயர்வு (பிரமோஷன்) கொடுக்கலாம். ஆனால் இந்தக் காரணத்திற்காகத்தான் அவர்களை ஒழித்துவிடவேண்டுமென்று சொல்வது பொருத்தமாகாது. சர்க்கார் அவர்களுக்கு உயர்வு கொடுத்து உதவும் வகையில் வேண்டியது செய்துகொடுப்பதாயிருந்தால், அவர்களை அனுப்ப நான் சம்மதிக்கிறேன்.

* THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON : திருவாளர் எம். எத்திராஜலு கொண்டுவந்தத் தீர்மானத்தின்படி, நமது முனிசிபல் ஊழியர் மாநிலம் முழுவதும் ஒரு சர்வீஸ் ஏற்படுத்தப் படவேண்டும். இந்தத் தீர்மானம் அமுலுக்கு வரவேண்டுமானால், அதிகச் செலவு ஏற்படும். மேலும், அந்த முனிசிபல் சிப்பந்திகளுடைய லீவ், சம்பளம், பென்ஷன், பிராவிடெண்ட் பண்டு முதலியவற்றிற்காக முனிசிபாலிட்டிகள் வசூலிக்கவேண்டிய தொகையைச் சரிபார்க்கவும், கணக்கு சரியாக வைக்கவும், வருவாய், லீவ் கொடுத்தல் முதலியவற்றைக் கவனிக்கவும் நகர சபைக்குப் புறம்பாக ஒரு பிரத்தியேக ஸ்தாபனம் வேண்டும். இதுபோன்ற பிரச்னை ஏற்கெனவே 1948 விழுப்புரம் முனிசிபாலிடியில் கொண்டுவரப்பட்டு சர்க்காரால் ஆலோசிக்கப்பட்டது. மேலும், ஊழியர்கள் மீது கண்காணிப்பு இருந்து வரவேண்டுமென்பதற்காக அந்த ஆலோசனை கைவிடப்பட்டது. இதை அமுலுக்குக் கொண்டுவரும் பட்சத்தில் இதனால் பலவித கஷ்டங்கள் ஏற்படுமென்பதைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதனால் முனிசிபல் சிப்பந்திகளின் குழந்தைகளின் படிப்பு பாதிக்கப்படும்.

[Srimathi Lourdhammal Simon] [31st August 1961

மேலும் அவர்கள் ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு மாற்றப்பட்டால், அவர்களின் குழந்தைகளின் படிப்புக்குத் தடை ஏற்படும். மற்றும் சிப்பந்திகள், தங்கள் வருமானத்திலிருந்து தாங்கள் வேலை செய்யுமிடத்திலும், குழந்தைகள் படிக்குமிடத்திலுமாக இரு குடும்பங்களை நடத்துவது கஷ்டம். மானேஜர், கணக்கர் முதலியோரை மாற்றுவதால் நிர்வாகம் பாதிக்கப்படும். ஆயினும், தொடர்ச்சியாக நன்மை பயக்க வேண்டுமானால், தொடர்ந்து ஒரே இடத்தில் சிப்பந்திகளிருப்பது இன்றியமையாததாகும். குறைந்த பட்ச தகுதியுள்ளவர்கள் ரெவின்யூ இன்ஸ்பெக்டர் ஆகவும், குமாஸ்தாக்களாகவுமே இருக்க விரும்புகிறார்கள். அவர்களை அரசாங்க உத்தியோகஸ்தர்களாக்கி, சொந்த ஊரைவிட்டு மாற்ற வழிவகை செய்வது அவ்வளவாக விரும்பத்தக்கதல்ல. நான்காவதாக, முனிசிபல் சிப்பந்திகளனைவரையும், மாநில முழுவதற்குமானவொரு சர்வீசை ஏற்படுத்தி, அரசாங்க நிர்வாகத்தின்கீழ் கொண்டுவந்தால், அவர்களை நிர்வகிப்பது அரசாங்க தலைமைக் காரியாலயத்திலும் மிகவும் அதிகமாக வேலையை வளர்த்துவதாகும். 1954-ல் முனிசிபாலிடியைச் சேர்ந்த மானேஜர்கள், ரெவின்யூ அதிகாரிகள், கணக்கர்கள் முதலியோரை ஒரு அரசாங்க சார்பற்ற சர்வீசாக ஏற்படுத்த வேண்டுமென்று ஆலோசிக்கப்பட்டு, அந்த ஆலோசனை கைவிடப்பட்டது. 1955-ல் சில முனிசிபாலிடிகள் தங்கள் உயர்தர சிப்பந்திகளை 5 வருடங்களுக்கு ஒருமுறை ஒரு முனிசிபாலிடியிலிருந்து, மற்றொன்றுக்கு மாற்ற வேண்டுமென அரசாங்கத்தைக் கோரினார்கள். இந்தப் பிரச்னை, முனிசிபல் சிப்பந்திகளுக்கும், சர்க்கார் சிப்பந்திகளுக்கும் சம்பள விகிதத்தில் ஏற்றத் தாழ்வு இருப்பதனால், அமுலுக்குக் கொண்டுவருவது அவ்வளவு உகந்ததல்ல என்று கைவிடப்பட்டது. சட்டத்தில் முனிசிபல் சிப்பந்திகளை ஒரு முனிசிபாலிடியிலிருந்து மற்றொன்றுக்கு மாற்ற ஷரத்துக்களிருக்கின்றன. இந்த ஷரத்துக்களை உபயோகித்து சர்க்கார் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்ட சில முனிசிபல் சிப்பந்திகள் விஷயத்தில் காலாகாலங்களில் தகுந்த நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன. ஒரு முனிசிபல் ஸ்தாபனத்திலிருந்து சிப்பந்தியை இன்னொன்றிற்கு அனுப்புவதற்கு அடுத்த முனிசிபாலிடியிலிருப்பவர்கள், இவர்களை ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். உடனடியாக மாற்றுவது இயலாத காரியமாகும். வெள்ளை அறிக்கையில் **District Municipalities Act, 73-A, 77-A,** தக்கபடி திருத்தியமைக்கப்பட வேண்டும். அப்படி செய்யப்பட்டால் மாவட்ட வாரியாகவும், மாநில வாரியாகவும் பிரித்து, பல சர்வீஸுகள் ஏற்படுத்தவும், உத்தியோக உயர்வும், அரசாங்க விதிமுறைப்படிச் செய்ய வழி இருக்கும். அப்படிச் செய்யப்பட்டால், சிப்பந்திகளைத் தேர்ந்தெடுப்பது போன்ற விஷயங்களை ஒரு தனி ஸ்தாபனத்தினிடத்தில் ஒப்படைக்கக்கூடும். சர்க்காரின் வெள்ளை அறிக்கையில் கண்டுள்ள பரந்த நோக்கங்களை மனதிற்கொண்டு

3-50 p.m. என்ன முடிவேற்படுகிறதோ, அதன்படி இந்த விஷயத்தில் முடிவேற்படும். இதே சமயத்தில், தனிப்பட்டவர் பெயரால்

31st August 1961] [Srimathi Lourdhammal Simon]

நகரசபை ஊழியர்களில் அரசியல் கட்சி இயங்கிவருகிறதென்ற எண்ணம் திரு. எத்திராஜுலுவுக்கு ஒரு பீதியைக் கொடுக்கிறது. இது தேவையில்லை. ஏனென்றால், ஒரு சில முனிசிபல் ஸ்தாபனங்களால் தனிக் கட்சிகள் இயங்குமென்ற எண்ணம் எதனால் ஏற்பட்டதென்று தெரியவில்லை. தேர்தலில் அங்கத்தினர்கள் பகிரங்க வேலைகள் செய்கிறார்கள் என்றால், அவற்றைப் பார்த்துக் கொண்டிருப்பது மக்கள் பிரதிநிதிக்கு சரி அல்ல. இவ்வாறு நிலைமை ஏற்படாமலிருக்க, செய்கையில் இவர் ஈடுபடுவது நலமாக இருக்கும். மிகவும் குறைந்த வருமானமுள்ளவர்களை, அங்கத்தினர் கூறியதைப்போல், இடம் மாற்றுவதால் அவர்களின் கஷ்டங்கள் அதிகமாகின்றன. மேலும் அங்கத்தினர் குறைந்த வருவாய் உள்ளவர்கள் நிலைமையைப்பற்றி நன்றாகக் கூறினார். அவ்விதமாக பொறுப்பு நமக்கு வேண்டும். உடனடியாக சிலர் சேருவதை provincialise செய்வதென்பது சாத்தியமில்லை. இதை நன்றாகச் சிந்தித்து அதன்படிதான் முடிவு எடுக்க முடியும். கடந்த 4 வருஷங்களில் சிதம்பரத்தில் நகர சபைத் தலைவர்கள் கூட்டம் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. எந்த நகர சபைத் தலைவர்கள் கூடினார்களென்பதையும் தெரியப்படுத்தினால் நலமாக இருக்கும். நான் முன் கூறிய காரணங்களினால் இந்த தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள முடியாத நிலை ஏற்படுகிறதென்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**(Mr. Chairman in the Chair.)**

SRI M. ETHIRAJALU : Sir, . . . . .

MR. CHAIRMAN : The hon. Member will please not make a long speech.

SRI M. ETHIRAJALU : Only one word, Sir.

இப்போது அமைச்சர் அவர்கள் சொன்ன பதிலுக்கு நான் ஒன்றும் பதில் சொல்ல முன்வரவில்லை. ஒன்றுமட்டும் சொல்வேன். நகரசபை ஊழியர்கள் சேவையை மாநில ரீதியாக மாற்ற வேண்டுமென்று சிதம்பரத்தில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, 10—8—1961 தேதிய "சுதேசமித்திரன்" பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் சொன்ன பதிலுக்கு சர்க்கார் தரப்பிலே இருக்கிற நிலையில் நான் ஒன்றும் சொல்ல முடியாத காரணத்தால், நான் என்னுடைய தீர்மானத்தை வாபஸ் பெறுகிறேன்.

The Resolution, by leave, withdrawn.

## (2) STATE CORPORATIONS.

SRI K. BALASUBRAMANYA AYYAR : Mr. Chairman, Sir, I move—

"This Council recommends to the Government to constitute a Committee consisting of certain number of Members elected by each House of the Legislature from among themselves to study the working of the State Corporations and other Companies and undertakings in which the State has a substantial share and to advise the